உ

திருச்சிற்றம்பலம்.

# தேவாரப்பண் சுர அமைப்பு.

## முதற் பாகம்.

முதற் பதிப்பு.

இஃது

திருநெல்வேலி ஜில்லா குலசேகரன்பட்டணம்
தேவாரவித்துவான், திருவாளர் இ. சுப்பிரமணிய
ஓதுவாமூர்த்தி அவர்கள் சகோதரரும் ஸங்கீதவித்துவான்
பெருங்குளம் திருவாளர் வா. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்
அவர்கள், மாணாக்கருமான ஜலதரங்கம்
இ. அப்பாசாமி ஓதுவாமூர்த்தி
இயற்றியது.

* ஸ்ரீ கான வித்யா பிரஸ்,
ஸ்ரீவைகுண்டம்.

1928.

ரிஜிஸ்டர் செய்தது. விலை ரூ 1=4=0.

குறிப்பு:—

* 1 முதல் 6-ம் பாரம்வரை அம்பாசமுத்திரம் அகஸ்தியர்பிரஸிலும்,
* மற்றப்பாரங்கள் ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ கான வித்யா பிரஸிலும்
பதிப்பிக்கப்பெற்றது.


ஞானசம்பந்தர்.


நாவுக்கரசர்.


சுந்தரர்.


மாணிக்கவாசகர்.



திருவாளர்,

மே. சு. வடிவேல்ப் பிள்ளை அவர்கள்



திருச்சிற்றம்பலம்.

# நால்வர்துதி.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
யாழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிருநாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
யூழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

திருஞானசம்பந்தர்.

மாதொர்கூறனை வலஞ்சுழிமருவிய மருந்தினை வயற்காழி
நாதன்வேதியன் ஞானசம்பந்தன் வாய்நவிற்றிய தமிழ்மாலை
ஆதரித்திசைகற்று வல்லார்சொலக்கேட் டுகந்தவர்தம்மை
வாதியாவினை மறுமைக்குமிம்மைக்கும் வருத்தம்வந்தடையாவே.

செல்வநிறை நாட்டுக்கோட்டை நகரத்தார் பல அறப்பணிகள் செய்து உலகிற்கு நன்மை விளைத்து வருதல் அனைவரும் அறிந்ததே. சைவத்துக்கும், தமிழுக்கும், பல நலங்கள் செய்துவருதலோடு, அன்னார் தேவாரப்பாடசாலைகள் ஏற்படுத்தியும் நன்மைபுரிந்தும் வருகின்றார்கள். அம்மரபில் அவதரித்த காரைக்குடி திருவாளர் சா. நா. சா. தே. சாத்தப்பசெட்டியார் அவர்களும். உறையூரிற் பிறந்து கேட்டார்க்கு இல்லைஎனப்புகலாமல் அவரவர்கள் திறம் தெரிந்து மலாயாநாடு கோலாலம்பூரில் ஈதல் அறம்புரிந்துவரும் திருவாளர் மே. சு: வடிவேல்ப்பிள்ளை அவர்களும், தமிழ்மக்களனைவருக்கும் இம்மைமறுமைப்பயனை அடைதற்கு வழிகாட்டிய திருவாளர் ஆறுமுகநாவலர் அவர்கள் அவதரித்த, தமிழ்மணம் கமழ்கின்ற யாழ்ப்பாணத்தில் அவதரித்து கோலாலம்பூரிலுறைகின்ற திருவாளர் பொன்னுத்துரை சபாரத்தினமவர்களும், தமிழ் வருதென்றற் காற்றும், பொதியமலையும், பொருனையாறும், நஞ்சைநிலமே வஞ்சமிலாவேலியுமாயமையப்பெற்ற திருநெல்வேலியில் வாய்மையும், உதவியும் தாய்மைபோற்பேணும் வேளாண்குலத்திற்தோன்றி இரங்கூனில் உறைகின்ற திருவாளர் நம்பியார்பிள்ளை அவர்களும், திரு. சண்முகானந்த சபையாரும், இந்நூல் வெளிவருதற்கு தக்க சரீர உழைப்பும், பொருளுதவி செய்தும் ஊக்கப்படுத்தியதற்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தங்கள் நண்பன்,

இ. அப்பாசாமி.

# முக்கியகவனிப்பு.

இந்நூலில், பாட்டுகள் தெரிந்துகொள்வதற்காக முக்கிய பலன் அளிக்கக்கூடிய மூன்று அடையாளங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அவைகளில் (கார்வை) அளவிற்காக கொடுக்கப்பட்டிருக்கும் சவுக்கப்புள்ளிகள் சுரங்களுக்கு மட்டும் கொடுக்கப்பட்டிருப்பதால் சுரங்களுடன்சேர்த்திருக்கும் பாட்டுகளை சுரங்கள் பாடுவதுபோல் பாடுக.

பாட்டுகளில் கொடுக்கப்பட்டிருக்கும் அகார, உகார சுரக்கோர்வைகளை, வரிசைமுறையாக, மேற்குறித்திருக்கிற பாட்டைப் பாடியபின் பாடுக.

பாட்டுகளில் கொடுக்கப்பட்டிருக்கும் ப. அடையாளமிட்ட எண்களையும் அப்பாட்டுகளின் வரிசைஎண் நீங்கலாக மேற்குறிக்கப்பட்டிருக்கிற பாட்டுகளின் வரிசை எண்களையும், தேவாரப்பதிகத்தின் வரிசை எண்களாகக்கொள்க.

---

இந்நூல் கிடைக்குமிடங்கள்:—

1. ஸ்ரீ கான வித்யா பிரஸ்,
ஸ்ரீவைகுண்டம்.

தேவாரவித்துவான்,

2. E. சுப்பிரமணிய ஓதுவாமூர்த்தி அவர்கள்,
பெரியகுளம்தெரு, அம்பாசமுத்திரம்.



# மதிப்புரை.

இசைத்தமிழில் வல்லுனரும் கவிச்சக்ரவர்த்தி ரவீந்திர நாத் டாகூரால்
புகழப்பெற்றவர்களுமான வித்துவான்,
**திருவாளர். தி. லக்ஷ்மணபிள்ளை அவர்கள் எழுதிய மதிப்புரை:—**

திருவாளர் இ. அப்பாசாமி ஓதுவாமூர்த்தி அவர்களால் இயற்றப்பெற்ற தேவாரப்பண் சுரஅமைப்பு என்னும் நூலைப்பார்வையிட்டேன். பக்திச்சுவைபழுத்துக்கேட்போரின் உள்ளங்களைத் தழலுறு வெண்ணெய்போல் உருகச்செய்யும் ஆற்றலையுடைய தேவாரத்தமிழ்ப்பண்களை உலகத்தில் என்றும் நிலைபெறச்செய்யவேண்டிய கடமை அப்பண்களின் பிறப்பிடமாகிய தமிழுலகத்தில் உறைவோரைப் பொறுத்தது. அக்கடமை யுணர்ந்து மேற்கொண்டு யாவரும் எளிதில் வாசித்துப்பாடுமாறு அப்பண்களைச் சுரப்படுத்தி அச்சிட்டு வெளியேற்றிய ஷை ஓதுவாமூர்த்தி அவர்களின் பேருதவி தமிழுலகம் என்றும் பாராட்டிச் சிந்திக்கத்தக்கது.

திருவனந்தபுரம்
4—10—28.

தி. லக்ஷ்மணபிள்ளை, பி. ஏ. (Ex. M. L. C.)
பென்ஷன்டு டிவிஷணல் டிறஷெறி ஆப்பீஸர்.



திருநெல்வேலி தேவாரவித்துவான்
**திருவாளர், சா. சுந்தரஓதுவாமூர்த்தி அவர்கள் எழுதிய மதிப்புரை:—**

திருவாளர் இ. அப்பாசாமி ஓதுவாமூர்த்திகளியற்றிய "தேவாரப்பண் சுரஅமைப்பு" என்னும் அரிய இசைநூலினைக் கண்ணுற்றுப் பெருமகிழ்வெய்தினேன்.

இத்தகைய நூலொன்று வெளியிடுதல் வேண்டுமென்று நெடுநாளாக நினைத்திருந்த எனதெண்ணம் இவர்கள் வாயிலாக நிறைவேறப்பெற்றது திருவருளமைப்பென்றே கருதுகின்றேன்.

தமிழிலே இசையானது மிகவும் உயர்ந்த நிலையில் அமையப்பெற்றுள்ள திருவருட்பாடற் தொகுதிகளாகிய தேவார திருவாசகங்களின் பண்முறைகளை எல்லாரும் எளிதில் உணர்ந்து இசையின் நயத்தையும் இறைவன் திருவருளையும் ஒருங்கே பெற்றுய்யும் வண்ணம் முதல் முதற்றோன்றிய இந்நூலின் ஆசிரியரவர்கட்குத் தமிழுலகம் என்றும் நன்றி பாராட்டற்குரியது.

இங்கிலவுலகின்கண்ணே இசைகளின் நயத்தை யெல்லாமினி துணர்ந்து இகபரவாழ்வு சிறப்படைதற்கு அவற்றைச் செவ்விதிற் பயன்படுத் திய நாகரீகமக்கள் தமிழ்நாட்டினரே யென்றும் வடமொழி முதலிய பிற மொழிகளிலுள்ள இராகங்களும், தாளங்களுமாகிய வெல்லாம் தமிழ்ப்பண் களிலிருந்தும், திறங்களிலிருந்தும் வகுத்தமைத்துக்கொள்ளப்பட்டன வென் றும், தஞ்சை மருத்துவத்தலைவரும் இசைவல்லுனருமாகிய திருவாளர், ஆபிரகாம் பண்டிதர் முதலிய நுண்ணிய ஆராய்ச்சியாளர்கள் மலை இலக்காக முடிவுகட்டியிருத்தல் யாவருமறிந்ததே.

முத்தமிழில் இசைத்தமிழானது நடுநாயகமாய் இலங்கிய பண்டைக் காலத்திலே இசைப்பாட்டு வகைகளும் இசைக்கருவிப்பெருக்கமும் தமிழ் நாட்டிலே சிறப்புற்றுப் பெருமிதமாய்த் திகழ்ந்ததுபோலப் பிற எந்நாட்டிலு மிருந்ததில்லை. தேவார முதல்வர்கள் காலத்திலே ஒப்புயர்வற்று வீறுபெற் றிருந்த தமிழிசை திருமுறை வகுத்தகாலத்தில் ஒரு சிறிது குறைவுபட்டும் ஆரியஇசைகள் உலாவலுற்ற பிற்காலத்தில் அருகியும் வழங்கலாயிற்று. தமிழிசையின் பெருமையறியாத தமிழ்மக்களுட் சிலர், ஆரிய முதலிய பிற மொழிப்பாடல்களைச் சுவையறியாதும், பொருளறியாதும் கேட்டு அவற்றின் வெற்றொலி முழக்கிலே மயங்கு மிக்காலத்தே சுவையும் பொருளுமொருங் குணர்ந்து ஊனுமுயிருங்கலந்து உருகும்படி இறைவன் பெரும்புகழ்பாடி இம்மைக்கும், மறுமைக்கும், பேரின்பந்துய்க்கும்வண்ணம் திருவருட் செழுந் தமிழ்த்தேவார திருவாசக திருப்புகழ்ப்பாசுரங்கட்குத் தற்காலத்தில் வழங்கும் பண்முறைகளைச் செவ்விதினமைத்துக்காட்டும் இந்நூலானது, தமிழ் வாணர் யாவர்கையிலும் நின்று நிலவிப்போற்றப்படுதற்குரிய தாதலின் தமிழ் நன்மக் களனைவரும் இந்நூலின் கண்ணுள்ள பண் அமைப்புகளை எளிதிற்கற்று

"தமிழினீர்மை பேசித்தாளம் வீணை பண்ணி நல்ல
முழவமொந்தை மல்குபாடல் செய்கையிடமோவார்"

ஆகிய முழுமுதற்பரம் பொருளை இன்னிசையால் வழுத்தி மும்மைப்பயனும் பெற்றுப் பெருவாழ்வெய்து வாராக.

திருநெல்வேலி
5—10—28.

தங்களன்புள்ள,

சா. சுந்தரஓதுவாமூர்த்தி,



சங்கீதத் துறையிற் றிலகம்போல் விளங்கும் காஞ்சீபுரம்
கௌரவமாஜிஸ்திரேட் சங்கீத வித்துவான் திருவாளர்,
கா. சுப்ரமணிய பிள்ளை அவர்கள் எழுதிய
மதிப்புரை:—

(9—11—28)

திருவாளர், இ. அப்பாசாமி ஓதுவாமூர்த்திகளால் இயற்றப் பெற்ற, தேவாரப்பண் சுர அமைப்பு, என்னும் நூல் நமது பார்வைக்கு இலக்காயிற்று.

இந்நூல் தேவாரப்பாடசாலைகளில் பயில்வோர்களுக்கும், மற்றவர்களுக்கும் நிரம்ப உதவியாக உள்ளது. நம் சைவசமய குரவர்கள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரப்பாடல்களால் நிகழப் பெற்ற எண்ணிறந்த விம்மிதச்செயல்கள் இன்றும் நவ நவமாய் பெரியார் வாயிலாகக்கேட்டு நம்மால் ஆனந்திக்கப்படுகின்றன. ஆகையால் இத்தெய்வத்திருத் தேவாரப்பண்களை சுரத்துடன் அமைத்துஎளிதிற் கற்றுக்கொள்ளுமாறு இத்தமிழுலகிற் குதவிய நம் ஓதுவாமூர்த்திகளுக்கு எல்லா நலங்களும் உண்டாகுமாறு செந்திலாண்டவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

காஞ்சீபுரம்,
9—11—28.

C. சுப்ரமண்ய பிள்ளை,
சங்கீதவித்வான்.



உ

திருச்சிற்றம்பலம்.

# தேவாரப்பண் சுர அமைப்பு.

## முதற் பாகம்.

### முகவுரை.

முழு முதற்கடவுள் சிவபெருமானே என்று உயிர்கள் துணிந்து வழிபட்டு உய்யும்பொருட்டு பல அற்புதங்களினால் சைவசமயத்தை நிறுவியருளிய சைவசமயகுரவர்கள் நால்வரில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், ஆகிய மூவரால் தேவாரமும், மாணிக்கவாசக சுவாமிகளால் திருவாசகமும், அருளிச்செய்யப் பட்டிருக்கின்றன. இவைகளே தமிழ் மறையாம்.

இப்பெரியார்கள் காலத்தில் தமிழ் நாடெங்கும் தேவாரம் பண் முறையுடன் மக்கள்எல்லாராலும் ஓதவும், ஆதரிக்கவும்பட்டு வந்தது. அஃதால் இம்மைமறுமையில் அடையலாகும் பெரும்பேற்றையும் அடைந்து வந்தனர். பின்னர் திருவாரூர் அபயகுலசேகர சோழன் அடியார் பற்பலர் வாயிலாக தேவாரங்களை ஒரோவொன்று ஓதக்கேட்டுப் பெருமகிழ்ச்சியடைந்து அன்னான் அத்திருப்பாடல்கள் முழுவதையும் கேட்க விரும்பினான். அவைகள் கிடைக்குமிடம் தெரியாததால் திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் மாணக்கர் நம்பியாண்டார் நம்பியைப் பிரார்த்திக்க அவர் அதற்கிணங்கிப் பொல்லாப்பிள்ளையாரை வேண்ட அவர் கட்டளைப்படி நம்பியாண்டாரும், அரசனும் தில்லையையடைந்து அங்கு தேவாரப்பதிகங்களைக் கண்டெடுத்தனர்.

அவைகளைப்பெற்றும், படித்தற்குப் பண்முறை அமையாதது பற்றி வருந்தித்தங்கட்கு அதனை யுணர்த்துமாறு இறைவனைத் துதிக்க இறைவன் "யாழ்ப்பாணனார் மரபினிற்பிறந்துள்ள பெண் ஒருத்திக்கு இசைகளெல்லாம் நன்குவரும்படி அளித்தோம்" என்று அருள்செய்ய அவ்வம்மையார் ஓதியபடியே நம்பியாண்டார் நம்பி அவற்றைப் பண்முறையாகவும், கட்டளைமுறையாகவும், வகுத்தருளினர். பின் அபயகுலசேகரசோழன் தேவாரப்பண்முறைகளைச் செப்பேட்டில் எழுதுவித்து இறைவன் திருமுன் அரங்கேற்றிச் சைவசமயமாகிய மெய்ச்சமயம் என்றும் தழைத்து ஓங்குமாறு உலகிற்கு ஈந்தனன்.

முன்கூறிய தேவாரம் ஏனையபாடல்களைப்போல் அல்லாமல் பண்முறையாயும், கட்டளை முறையாயும் நம்பெரியோர் நமக்கு அமைத்துத்தந்தருளியது நம்மனோரால் பெரிதும் போற்றத்தக்கது. இம்முறை இசைமுறை அல்லது சங்கீதமுறையாகும் இம்முறையுடன் ஓதி அன்புசெலுத்தினால்தான் இறைவன் அருள்செய்யுமோஎன்று சிலர் வினவலாம். இறைவன் திருவருளைப்பெறுதற்கு வழிகள் எண்ணிலவாயினும், அவை எல்லாவற்றிலும் மிக மேலாகக் கொள்ளப்படும் நெறி இசைச்சாதனமே என்பது பெரும்பாலார்க்கும் ஒப்பமுடிந்ததொன்று. பலவாறு விரிந்து சிதறுண்டுகிடக்கும் சிந்தையை ஒரு வழிப்படுத்தற்கு இசையினும் மேலானதில்லையென்பது யாவருக்கும் எளிதில் புலனாகும். ஐம்புலன்களையும் அடக்கி மனத்தை இறைவன்பால் ஈடுபடச்செய்து மக்கள் இறைவன் அருள் பெறுதற்கு இசைமுறையே மேலானதென்று கருதியன்றோ நம் நாயன்மார்கள் இறைவன்மீது திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பாக்களைப் பண்முறைப்படுத்தியும், கட்டளைமுறைப்படுத்தியும் நமக்கு அமைத்துத்தந்திருக்கின்றார்கள். தேவாரப்பாபாடல்களிலும் இசையின் பெருமையை இடையிடையே பல இடங்களிலும் நன்கு விளக்கிக்காட்டியிருக்கின்றார்கள்.

இதுபற்றியே தேவாரம் பண்முறையுடன். ஓதுதல் மக்களின் முக்கியகடமையாகும் மக்களுள் பலர் தமிழ்மொழியில்

அல்லாமல் பிறமொழிகளில் பாடினுற்ருன், சங்கீதம் என நினைக்கின்ருர்கள். அன்றியும் தம்மைச் சிலர் மதிப்பார்களென்று நினைத்தும் மற்றவர்கள் பாடுகின்ருர்களே நாமும் கற்றுப்பாடுவோம் என்ற அவாவுடனும் பிறமொழிகளிலுள்ள பாடல்களைப் பொருள் தெரிந்தோ தெரியாமலோ பாடிவருகின்ருர்கள். இப்பாடல்கள் தமிழ் நாட்டிற்கு வேண்டுமென்ருவது வேண்டாமென்ருவது நான் கூறவரவில்லை. ஆனல் மக்கள் ஒவ்வொருவரும் தம் தம் தாய்மொழி களில் பெரியாரால் இறைவன்பேரில் அருளிச்செய்திருக்கின்ற திருப் பாடல்களை முதலில் கற்றுக்கொள்ளவேண்டுவது இன்றியமையாத தாகும். ஒலிவடிவாகிய நாதத்தை முறையாகவும், கால அளவின தாகவும் அமைத்துப்பாடுவதற்கே **"இசைமுறை"** எனப்படும். ஆனல் இம்முறை ஒரு மொழிக்குமாத்திரம் உரித்தல்ல. பண்முறை யிற்கண்ட இராகங்கள் சுருதியைச்சேர்ந்தும் அதாவது ஒலிவடி வாகியசுரங்களைச்சேர்ந்தும் கட்டளைமுறையென்பது காலஅளவைச் சேர்ந்தும் அதாவது தாளத்தைச் சேர்ந்துமிருக்கின்றன.

சிலர் தமிழ்மறையாகிய தேவாரப்பண்முறையை புறக்கணித் துப் பிறமொழிப்பாடல்களை உயர்த்தி வருகின்ருர்கள். இவர்கள் இவ்வாறு செய்துவருவது யாதுகாரணம் பற்றியோ அறிகிலேன். ஒவ்வொருமொழியிலும் பற்பல வர்ணமெட்டுகளிலும் அதாவது பற்பல பண்களிலும் பற்பலவிதமான சுவைகள் இருக்கின்றனயென் பதையாவரும் மறுக்கமுடியாது. தமிழ்நாட்டின்கண் வழங்கிவருகிற சங்கீதக்கச்சேரிகளில் தெலுங்கு முதலான பிறமொழிப் பாடல் களையே தலைமையாகக்கொண்டும் அப்பாடல்களை அதிகமாகப்பாடி யும்வருகின்ருர்கள். தமிழ்மொழி அல்லாத பிறமொழிகளில் இறைவனது புகழைப்பாடுவதால், தமிழ்மக்கள் இன்னதென்று அறிந்து கொள்ளமுடியாததால் அதில் ஈடுபடாமல் வித்துவான்களிடம் தங்களுக்கு விருப்பமுடைய, தேவாரம், திருவாசகம், திருப்புகழ், பிள்ளைத்தமிழ் இன்னும் பல தமிழ்ப்பாடல்களைப் பாடும்படி கேட்கின்ருர்கள். தமிழ்ப்பாடல்கள்

என்றதும், வித்வான்கள் நாடிதளர்ந்துபோவதுமன்றி சபை யோர்கட்கு சங்கீத ஞானம் இல்லையென்றும் நினைக்கின்றார்கள். அத்தருணத்தில் சபையோர்களும் பாடகருக்கு தமிழ்ப்பாடலில் தக்க ஞானம் இல்லையென்றும் நினைக்கிறார்கள்.

தமிழ் அன்னை துயிலுணர்ந்தெழுந்தாள். தமிழ்நாடு உணர்வு பெற்றது. தமிழ்ப்பாடல்கள் பாடத்துவக்கியதும் சபையின் கண்ணுள்ளமக்கள் அனைவரும் இறைவனது பெருமையை நினைந்து நினைந்து உருகி, ஒலிவடிவாகிய பிரமத்தினிடத்து ஈடுபடுகின்றார்கள். அத்தருணம் சபையை உற்றுநோக்கின், அது எம்பெருமான் தாண்டவமாடியதிருக்கூடமெனவிளங்கும். இஃதுணர்ந்த எவர்க்கும் ஏனைய பாடல்களைப்பாடி தமிழ்மக்களின் அன்பைப்பெறமுடியாதென்பதும் புலனாகும்.

தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய தமிழ்ப்பாடல்கள் கல்மனதையும் கரையச்செய்யும் என்பதற்கு ஐயமில்லை தருமபுரத்தில் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் பாடிய பண்ணை யாழ்ப்பாணர் யாழில் அமைத்து வாசிக்க இயலாது யாழை உடைக்கச்சென்றது இசையின்பெருமையை நன்குவிளக்கும். மற்ற மொழிகளில் உள்ள பாடல்களைவிடத்தமிழ்பாடல்கள் தெய்வத்தன்மையில் எவ்விதக்குறைபாடும் உடையனவல்ல. அனைத்திற்கும் மேம்பாடுடையனவே நம்கலியுகவரத முருகப்பெருமானே திருஞானசம்பந்தமூர்த்தியாய் திருவவதாரஞ்செய்தருளினார். அவர் பாடலின்தெய்வத்தன்மை எம்மாற்கூறவியலுமோ? தமிழ்நாட்டிற்கு முதலில் வேண்டுவது நம் பெரியார் திருவாய்மலர்ந்தருளிய தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய தமிழ்ப்பாடல்களே யாம்.

ஆகையால் நம் தமிழ்மக்கள் அனைவரும் தமிழ்த்தாயையும் நம் பெரியார் நமக்கு அன்புடனளித்திருக்கும் பண்முறைகளையும் போற்றி ஆதரித்துவரின் நமக்கு முற்பட்ட பெரியார்காலத்து, இருந்ததுபோல், இல்லந்தோறும், தமிழ் இசைமணம் கமழ நாம் இம்மைமறுமைப்பயனை அடைவோம் என்பதற்கு ஐயமில்லை.

பிறமொழிப்பாடல்களைத் தலைமையாகக்கொண்டு பாடிவந்த முன்னுள்ள சங்கீதவித்வான்களைப்போல் தேவாரப்பண்முறையைத் தமக்குத் தோன்றியபடி பாடாமல், தம் கடமையையுணர்ந்து தேவாரத்தைப்பண்முறையுடன்பாடி தமிழ் மக்களை இன்புறச்செய்து வருகின்ற, காஞ்சீபுரம் வித்வான் திருவாளர் நாயனுப்பிள்ளை என்ற சுப்பிரமணியபிள்ளையவர்கட்கு தமிழ்மக்கள் பேரால் நன்றிசெலுத்துகிறேன்.

தேவாரத்தை பண்முறையுடன் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற அவாவுடன் எனது சகோதராவர்கள் பல தேவாரவித்வான்களிடம் சென்றும் அவர்கள், உண்மைவிளக்காததுபற்றி வருந்திநிற்குங்கால், திருவனந்தபுரம் பென்ஷன் எக்ஸைஸ் கமிஷனர் திருவாளர் யாழ்ப்பாணம் T. பொன்னம்பலம்பிள்ளை அவர்கள், திருவாளர் வள்ளல். சோ. சிவஞானதேசிகரவர்கள், இவ்விருவர்களின் வேண்டுகோளிற்கிணங்க ஆண்டிபட்டி ஜெமீன் திருவாளர் பெத்தாச்சி வள்ளல் எனது சகோதரவர்களை திருவாரூர் தேவாரவித்வான் திருவாளர் குருசாமிதேசிகரவர்களிடம் அனுப்பி நன்கு பண்முறைகளைக்கற்பித்து வைத்தார்கள். யானும்திருவாளர் தேசிகரவர்களிடம், பாடங்கேட்டிருக்கிறேன்.

தமிழ்நாட்டின்கண் பிறமொழிகளிலுள்ள பாடல்களில் தெலுங்கு முதலானபாடல்கள் தலைமை பெற்றும் சுரதாளங்களுடன் வழங்கப்பெற்றும் வருதலால், பண்டைமொழியாயும் நம் நாட்டிற்கு திலகமெனவிளங்கும் தமிழ்மொழியில் நம்பெரியார் அருளிச்செய்த தேவாரம், திருவாசகம் முதலான பல தமிழ்ப்பாடல்களை தமிழ்மக்கள் மறந்து தெலுங்குமுதலான ஏனைய பாடல்களில் மனஞ்செல்வாராயினர்.

சென்றும் யாதுபயன்? இசைச்சுவையைமட்டும் அறிந்து, மொழிச்சுவையை அறியாது தயங்கிநின்று இசைச்சுவைமட்டும் பயன்படாது மொழிச்சுவையும் சேர்ந்து அறிதலே பயனுறுமென உணர்உற்ற மக்கள், பசுவைமறந்தகன்று தன்தாயின்நினைவுறுங்கால் கதறித்தாயைவந்து அடைதல்போல, நம் தாய்மொழியாகிய தமிழ் இசையைநாடும் இந்நாளில் தமிழ்மொழியில் நம்பெரியார்

திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்கள் பண்முறையாக சுரதாளங்களுடன் இதுவரை வெளிவராதது தமிழ்மக்களின் ஊக்கம் இன்மையன்றோ இதைஉணர்ந்த அடியேன் மக்கள்பலரும் தேவாரத்தைப் பண்முறையுடன்நன்குகற்று இறைவனைவழிபடவேண்டுமென்னும் அவாவுடன் முருகன் அருள்துணைகொண்டு ஒரு வழிகண்டு வழக்கத்திற்பாடி வரும் முறையை பெரும்பாலுமொத்து இந்நூலை எழுதி முடித்தேன். முடிக்தும் அச்சியற்றி வெளிவரக்காலம் தாழ்த்தது. இவ்வுலகில் ஒருகாரியத்தை முற்றுப்பெறச்செய்ய வேண்டுதற்கு பொருள்இன்றியமையாததாகும். எனவே இந்நூலியற்றப் பொருளுதவிவேண்டி முன்பின்அறியாத சிங்கப்பூர், கோலாலம்பூர், பினாங்கு, ரெங்கோன் முதலான இடங்கள் செல்ல, அங்குள்ளார்கள் ஆதரித்ததுமன்றி தமிழ் மக்கட்குஇந்நூல் இன்றியமையாதெதென்று ஊக்கத்துடன் தெரிவித்தார்கள்.

எனது வாழ்நாள் முழுதும் இதற்களித்து தமிழ்மக்கள் இல்லங்கள்தோறும் தமிழிசைப்பாடல்களைப் பரப்பவேண்டுமென்று முடிவுகட்டியுள்ள எனது நோக்கம், செல்வநிறை நாட்டுக்கோட்டை நகரத்து நண்பர்களைப்போலவும், தமிழ்மணம்வீசும் யாழ்ப்பாண நண்பர்களைப்போலவும், பண்முறைமுதலான தமிழ்ப்பாடல்களை மக்கள் அனைவரும் ஆதரித்துவரின் சுமார் பத்து ஆண்டுகளுக்குள் நிறைவேறுமென்று உறுதியாக நினைக்கிறேன். ஆதலால் மக்கள் அனைவரும் பெரியார்திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களைப்போற்றி ஆதரித்துவரும்படி வேண்டிக்கொள்கிறேன்.

இறைவனது பெருமை குரலிலும், இசைக்கருவிகளிலும், அடங்காதெனினும், இயன்றளவு இந்நூலில் பயிற்சிப்பாடம், தேவாரப்பண், திருப்புகழ், சிந்து முதலியன சுரதாளங்களுடன் வரையப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பில் தமிழில் கீதம், வர்ணம், முதலியன வெளிவரும்.

**குற்றங்களைந்து குணம் கொள்க,**

தங்கள் நண்பன்,

**இ. அப்பாசாமி.**

# நால்வர் சரித்திர குறிப்பு.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

சோழநாட்டில் சீர்காழி என்ற சிவஸ்தலத்தில் பிராமண வருணத்தில் சிவபாத இருதயர் பகவதியார் என்பவர்களது அருந்தவப் பேருய் அவதரித்து மூன்ரும் பிராயத்திலே நீராடச்சென்ற தந்தையாரோடு குளத்திற்கு சென்றபொழுது உமாதேவியாரால் ஞானப்பால் ஊட்டப்பெற்று சிவபிரான் பொற்ருளம், முத்துச்சிவிகை முத்துச்சின்னம், முத்துப்பந்தர் அளிக்கச்சிவஸ்தலங்கள் தோறும் சென்று தேவாரத்திருப்பதிகங்கள் பாடி அளவிலா அற்புதங்கள் ஆற்றி சைவசமயத்தை நிறுத்தி தமது பதினரும் வயதில் திருமணக் கோலத்துடனே திருப்பெருமண நல்லூர் என்னும் க்ஷேத்திரத்தில் சிவபெருமான் ஆணையால் தோன்றிய ஜோதியில் மனைவியோடும் திருமணங்காண வந்த இனவருடனும் மறைந்தருளினர்.

## திருநாவுக்கரசு நாயனர்.

திருமுனைப்பாடி நன்னுட்டில் திருவாமூரில் வேளாளர் குலத்தில் புகழனர் மாதினியார் தவப்பயனுயவதரித்துச் சிறுவயதிலேயே பெற்ரோரையிழந்து தமக்கையாராகிய திலகவதியாரையே நம்பி வாழும் நாளில் சற்சமயமிது வெனவறியாது சமணமதத்திற்புகுந்து ஒழுகிவந்தனர். அதுகண்டு மனம் வருந்திய திலகவதியார் தாம் திருத்தொண்டு செய்துகொண்டிருந்த திருவீரட்டானத்தீசனுரை வேண்ட அவர் நாயனுர்க்கு சூலைநோய் வருவித்து ஆட்கொள்ள நாயனுர் அருள்மிகுந்த தேவாரத்திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு திருவீரட்டானத்திலிருக்கையில் இஃதறிந்த சமணமன்னன் சமணக் குருமார் ஏவுதலின்படி அவரை வரவழைத்து நஞ்சூட்டியும் நீற்றறையிட்டும் யானையால் மிதிக்கச்செய்தும் கல்லிற்பிணித்துக் கடலிலிட்டும் அவைகளிலெல்லாம் பொன்ருது சிவனருளாலே தப்பித்துக்கல்லே தோணியாகக்கடல்கடந்து கரையேறி இன்னும் பல அற்புதங்களெல்லாம் இயற்றி எண்பதிற்ரோண்டு வரையிலிருந்து பின் திருப்புகலூர் என்னும் க்ஷேத்திரத்தில் சிவபிரான் திருவடி நீழலடைந்தார்.

## சுந்தரமூர்த்தி நாயனர்.

ஆதியில் திருக்கைலாயத்திலே சிவபிரானுக்குத் தொண்டராயிருக்கையில் பெருமான்தரிக்கும்பொருட்டு மலர்கொய்ய நந்தவனம்செல்ல அங்கு பார்வதிதேவியார்க்காகப் மலர்கொய்ய வந்த சேடியாராகிய அனிந்திதை கமலினி என்பாரைக்கண்டு காதலிக்க கடவுளாணையால் பூமியில் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரென்னும் பதியில் ஆதிசைவகுலத்தில் சடையனர் இசைஞானியார்க்குப்புத்திரராய் அவதரித்துத்திருமணப்பருவம் அடுக்க திருவெண்ணைநல்லூரில் விவாஹம் நடக்கையில் சிவபிரானலே தடுத்தாட்கொள்ளப்பட்டு தேவாரத்திருப்பாடல்கள் பாடி திருவாரூர்க்கு வந்து வசிக்கையில் முன்கைலாயத்திற் காதலித்தவர்களில் கமலினியார் அனிந்திதை ஆணையினல் பூமியில் அவதரித்திருந்தார்கள். அதாவது பரவையார் சங்கலியார் என்ற பெயரையுடையவர்களை மணந்து சிவபிரானையே பரவைவீட்டிற்கு ஊடல்தீர்க்கத்தூதுவிடுத்து இன்னும் பல அற்புதங்கள் செய்து தமது 18-ம் வயதில் மண்ணுலகை விட்டு முன்பொற்கைலாயஞ் சார்ந்தார்.

## மாணிக்கவாசக சுவாமிகள்

பாண்டிநாட்டில் திருவாதவூர் என்னும் க்ஷேத்திரத்தில் அமாத்தியப்பிராமணர்குலத்தில் அவதரித்து அரிமர்த்தன பாண்டியனுக்குமந்திரியாகி அவனல் நன்குமதிக்கப்பெற்றிருக்கையில் அவனது வேண்டுகோட்கிணங்கிக் குதிரை வாங்கும்பொருட்டு வேண்டும் பொருள் கொண்டு கீழ்கரை நோக்கிச்செல்ல வழியிலே திருப்பெருந்துறையில் சிவபிரானலே ஞானேபதேசஞ்செய்யப்பட்டு அங்கேயே தங்கிக்கொணர்ந்த பொருளையெல்லாம் சிவாலயப்பணியில் செலவிட்டுக்கொண்டு இருந்தனர். அஃதறிந்த மன்னன் பொருளுகிவாத ஓரடிகளைத்தண்டித்தனன் சிவபிரான் ஆணையால் குதிரைகள் வரும் என்றுகூற சிவபிரான்நரிகளையெல்லாம் பரிகளாக்கிக்கொணர அவைகள் அப்படியே இரவில் நரிகளானதைக்கண்டு பாண்டியன் வஞ்சமென்றுணர்ந்து வாதவூரரை வருத்த சிவபிரான் வைகையில் நீர் பெருகச்செய்து அதிலிருந்துண்டான அதாவது மன்னனுக்கு அடியாரது பெருமையை யுணர்த்தியருள பாண்டியன் வாதவூரரை யறிந்து தில்லைக்கனுப்பதிருவாசகம் திருக்கோவையார் முதலியன அருளி, புத்தரைவாதில் வென்று பின் சிவபிரான் திருவடிஜோதியிற் கலந்தருளினர்.

உ

திருச்சிற்றம்பலம்.

# பொருளடக்கம்.

## முதற்பாகம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# முதற்பாகம் 1-ம்பதிப்பின் பிழை திருத்தம்.

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | — | — | வலப்புரம்<br>இடப்புரம் | வலப்புறம்<br>இடப்புறம் } |
| 13 | — | 30 | பட்டிருக்கிறது | பட்டிருக்கின்றன |
| 16 | — | 1 | சுத்தநாட | சுத்தநாட்ட |
| | | 30 | கரிசதசரிச | கரிசதசதச |
| 34 | 1 | 4 | தழுவிப | தழுவிய |
| | 2 | 1 | னுபர்பசு | னுயர்பசு |
| 39 | 1 | 3 | கேவண | கோவண |
| 43 | 3 | 4 | கோலத்தார் | கோலத்தாற் |
| 47 | 2 | 1 | செண்பகக் | சண்பகக் |
| | | 4 | விரகன் | விரகன |
| 49 | 1 | 1 | நீறுசேர்வகொர் | நீறுசேர்வதொர் |
| 75 | 1 | 4 | தோர்புனலர் | தொர்புனலர் |
| 78 | 1 | 3 | தொடக்கி | துடக்கி |
| | 2 | 2 | தொடக்கி | துடக்கி |
| 82 | 3 | 4 | கோடியையே | கொடியையே |
| 84 | 2 | — | புழுவாய்என்னும்பாட்டு | திருப்புலியூரில்2வது பாட்டாகும் |
| 88 | — | | 41-வது வரியாகச்சேர்த்துக்கொள்க | □□, □□, □□ ▭ |
| 89 | 2 | 1 | மூர்த்தி | மூர்த்தீ |
| 98 | 3 | 5 | அன்னவனு | என்னவனு |
| 104 | 1 | 7 | இம்மயே | இம்மையே |
| 109 | — | 12 | மபில் | மயில் |
| 112 | — | 18 | இராககதம்பம் | இராககலம்பகம் |
| 115 | 5 | 1 | யள்ளசம்பந்த | யுள்ளசம்பந்த |
| 120 | — | 2 | அடைங்கிய | அடங்கிய |

# சுரபேதங்களின் விபரம்.

சுரங்கள் ஏழு, அவையாவன:—

ச ரி க ம ப த நி என்பன. இவற்றின் பெயர் முறையே, 1. ஷட்ஜமம். 2. ரிஷபம். 3. காந்தாரம். 4. மத்திமம். 5. பஞ்சமம். 6. தைவதம். 7. நிஷாதம் என்பன.

இவற்றுள் ஷட்ஜம பஞ்சமங்களுக்குப் பேதமில்லை. ஏனைய ஐந்து சுரங்களும் ப்ரக்ருதி, விக்ருதி பேதங்களால் அடியிற்கண்ட படி பதினைந்து வகைப்படும்.

2. ரிஷபம்.
- 1. சுத்த ரிஷபம்.
- 2. சதுச்ருதி ரிஷபம்.
- 3. ஷட்ச்ருதி ரிஷபம்.

3. காந்தாரம்.
- 1. சுத்த காந்தாரம்.
- 2. சாதாரண காந்தாரம்.
- 3. அந்தர காந்தாரம்.

4. மத்திமம்.
- 1. சுத்த மத்திமம்.
- 2. பிரதி மத்திமம்.

6. தைவதம்.
- 1. சுத்த தைவதம்.
- 2. சதுச்ருதி தைவதம்.
- 3. ஷட்ச்ருதி தைவதம்.

7. நிஷாதம்.
- 1. சுத்த நிஷாதம்.
- 2. கைசிகி நிஷாதம்.
- 3. காகலி நிஷாதம்.

இப்பதினைந்து வகைகளில் சதுச்ருதி ரிஷபமும், சுத்த காந்தாரமும் ஒரே ஸ்தானத்தையுடையன. அப்படியே ஷட்ச்ருதி ரிஷபம் சாதாரண காந்தாரமும்; சதுச்ருதி தைவதம், சுத்த நிஷாதமும், ஷட்ச்ருதி தைவதம் கைசிகி நிஷாதமும் தனித்தனி ஒரே ஸ்தானத்தையுடையன. எனவே எட்டு சுரஸ்தானங்களும் நான்கு சுரஸ்தானங்களாகின்றன. ஆதலால் சுரபேதஸ்தானம் பதினாறில், நான்கு போக பன்னிரண்டு ஸ்தானங்கள் மட்டிலும் பல இசைக் கருவிகளில் அமைக்கப்பட்டு வழங்கி வருகின்றன. விபரம் அடியிற் காண்க.

## சுரபேதங்கள் தெரிவிக்கும் கட்டம்.

| எண்கள். | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| ச | சுத்த ரி | சது ரி | சா க | அந்த க | சுத்த ம | பிர ம | ப | சுத்த த | சது த | கை நி | கா நி |
| | | சுத்த க | ஷட் ரி | | | | | | சுத்த நி | ஷட் த | |

ஒரு ஸ்தாயைக்கு சுர பேதஸ்தானங்கள் 12.

இந்நூலில் ● இந்தப்புள்ளி சுரங்களின் கீழிடப்பட்டிருந்தால், முதல் ஸ்தாயை (கீழ் ஸ்தாயை) சுரமென்றும், புள்ளியிடாத சுரங்கள் இரண்டாவது ஸ்தாயை (மத்திய ஸ்தாயை) என்றும், புள்ளிசுரங்களின் உச்சியிலிடப்பட்டிருந்தால், மூன்றாவது ஸ்தாயை (மேல் ஸ்தாயை) என்றும், தெரிந்து கொள்ளவேண்டும்.



ஒரு காத்தோடு மற்றொரு காத்தைத் தட்டிப்பிரிப்பதே தாளமெனப்படும்.

தாள வகை பத்துள் சிற்சில விபரங்கள் அடியிற் குறிக்கப்பட்டிருக்கின்றன.

1-வது காலமென்பதற்கு விபரம்.

100 தாமரையிதழ்களைபடுக்கி அவற்றின் ஒரு இதழில் ஊசியைச் செலுத்துதற்குட்பட்ட காலம் "கணம்" என்று சொல்லப்படும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| கணம் | = | 8-க்கு | —— | இலவம் | ... | 1 |
| இலவம் | = | 8-க்கு | —— | காஷ்டை | ... | 1 |
| காஷ்டை | = | 8-க்கு | —— | நிமிஷம் | ... | 1 |
| நிமிஷம் | = | 8-க்கு | —— | துடி | ... | 1 |
| துடி | = | 2-க்கு | —— | திருதம் | ... | 1 |
| திருதம் | = | 2-க்கு | —— | லகு | ... | 1 |
| லகு | = | 2-க்கு | —— | குரு | ... | 1 |
| லகு | = | 3-க்கு | —— | ப்லுதம் | ... | 1 |
| குரு | = | 2-க்கு | —— | காகபாதம் | ... | 1 |

4-வது அங்கத்தின் விபரம்.

அங்கமென்பது தாளங்களின் அடையாளம். அவ்வடையாளங்கள் ஆறின் விபரத்தையும், அவைகளை வழக்கத்தில் கொண்டுவரவேண்டிய முறையையும் அடியிற் காண்க.

| எண் | விபரம் | அட்சர காலங்கள் அல்லது எண் |
|---|---|---|
| 1 | அனுத்திருத அடையாளம் பிறை ‿ | 1 |
| 2 | திருத அடையாளம் மதி ௦ | 2 |
| 3 | லகு அடையாளம் கணை \| | 4 |
| 4 | குரு அடையாளம் வில் 8 | 8 |
| 5 | புலுத அடையாளம் பாம்பு ~ | 12 |
| 6 | காகபாத அடையாளம் புள்ளடி × | 16 |

1. ⌣ இவ்வடையாளமிட்ட பிறைக்கு இரு கரங்களை யுஞ்சேர்த்து ஒருமுறை அடித்தல் வேண்டும்.

2. ० இவ்வடையாளமிட்ட மதிக்கு மேற்கூறியவாறு ஒரு முறை அடித்து வலக்கையை வீசவேண்டும்.

3. | இவ்வடையாளமிட்ட கணக்கு ஒருமுறை அடித்து வலக்கை சுண்டு விரலிலிருந்து மூன்று விரல்களையும் எண்ண வேண்டும்.

4. 8 இவ்வடையாளமிட்ட வில்லிற்கு ஒரு முறை அடித்து எழுவிரல்களையும் தொடர்ந்து எண்ணவேண்டும்.

5. ~ இவ்வடையாளமிட்ட பாம்பிற்கு ஒரு முறை அடித்து நான்குஅட்சரங்களின் கார்வை(அளவு)நின்று வலக்காத்தை இடதுபக்கம் நீட்டி நான்கு அட்சரங்களின் கார்வை நின்று வலப்புரம்நீட்டி நான்கு அட்சரங்களின் கார்வை நிற்கவேண்டும்.

6. × இவ்வடையாளமிட்ட புள்ளடிக்கு இருகையை யுஞ்சேர்த்து ஒருமுறை அடித்து நான்குஅட்சரங்களின் கார்வை நின்று வலக்காத்தை உயரமாக எடுத்து நான்கு அட்சரங்களின் கார்வை நின்று இடப்புரம் நீட்டி நான்குஅட்சரங்களின் கார்வை நின்று வலப்புரம் நீட்டி நான்கு அட்சரங்களின் கார்வை நிற்க வேண்டும்.

இருகையையுஞ்சேர்த்து அடிப்பதற்குக் காதையென்றும்,
கையைப்பிடித்து வீசுதற்கு விஸர்ஜிதமென்றும்,
கையை இடப்புரம் நீட்டுதற்கு க்ருஷ்யவென்றும்,
கையை வலப்புரம் நீட்டுதற்கு ஸர்ப்பிணியென்றும்,
கையை உயரமாக எடுப்பதற்கு பதாகமென்றுஞ் சொல்லப்படும்.

மேற்கூறிய ஆறு அடையாளங்களில் ஒன்று முதல் மூன்று வரையுள்ள அடையாளங்களினால் முப்பத்தைந்து தாளங்களும், நான்கு முதல் ஆறுவரையுள்ள அடையாளங்களினால் நூற்றெட்டுத்தாளங்களும் வகுக்கப்பட்டிருக்கின்றன.

| இந்த அடையாளமாகிய லகுவிற்குப்பொதுவாக நான்கு அட்சரங்களேற்பட்டிருப்பினும் ஜாதி வகுக்கு முறையில் அடியிற் கண்டபடி அட்சரங்களேற்படுகின்றன.

## ஆருவது ஜாதி ஐந்தின் விபரம்.

1. சதுச்ரஜாதிக்கு 4 அட்சரங்களும்
2 திருச்ரஜாதிக்கு 3 ,,
3. மிச்ரஜாதிக்கு 7 ,,
4. கண்டஜாதிக்கு 5 ,,
5. சங்கீர்ணஜாதிக்கு 9 ,,

முறையே யேற்படுகின்றன.

## தாளப்பகுதி ஏழின் பெயரு மவற்றிற்கேற்பட்ட அங்கங்களும்.

1. துருவம் | O | |
2. மட்டியம் | O |
3. ரூபகம் O |
4. ஜெம்பை | ◡ O
5. திருபுடை | O O
6. அடதாளம் | | O O
7. ஏகதாளம் |

இவ்வேழு தாளங்களையும் மேற்கூறிய ஜாதி ஐந்துகளில் உபயோகப்படுத்துவதினால் ஏழுக்கும் ஐந்துக்கும் பெருக்க, முப்பத்தைந்து தாளங்களாகின்றன.

முப்பத்தைந்து தாளங்களின் விபரம்.

### 1. துருவ தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| ஜாதி | அடையாளம் | அட்சரம் | | | | ஆக எண் |
|---|---|---|---|---|---|---|
| சதுச்ரம் | \| O \| \| | 4 | 2 | 4 | 4 | 14 |
| திருச்ரம் | ஷை | 3 | 2 | 3 | 3 | 11 |
| மிச்ரம் | ... | 7 | 2 | 7 | 7 | 23 |
| கண்டம் | ... | 5 | 2 | 5 | 5 | 17 |
| சங்கீர்ணம் | .... | 9 | 2 | 9 | 9 | 29 |

## 2. மட்டிய தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| ஜாதி | அடையாளம் | அட்சரம் | ஆக எண் |
|---|---|---|---|
| சதுச்ரம் | \| O \| | 4 2 4 | 10 |
| திருச்ரம் | ஷெ | 3 2 3 | 8 |
| மிச்ரம் | ... | 7 2 7 | 16 |
| கண்டம் | .... | 5 2 5 | 12 |
| சங்கிர்ணம் | .... | 9 2 9 | 20 |

## 3. ரூபக தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| சதுச்ரம் | O \| | 2 4 | 6 |
| திருச்ரம் | ஷெ | 2 3 | 5 |
| மிச்ரம் | ... | 2 7 | 9 |
| கண்டம் | .... | 2 5 | 7 |
| சங்கிர்ணம் | ... | 2 9 | 11 |

## 4. ஜெம்பை தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| சதுச்ரம் | \| ◡ O | 4 1 2 | 7 |
| திருச்ரம் | ஷெ | 3 1 2 | 6 |
| மிச்ரம் | .... | 7 1 2 | 10 |
| கண்டம் | ... | 5 1 2 | 8 |
| சங்கிர்ணம் | .... | 9 1 2 | 12 |

## 5. திருபுடை தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| சதுச்ரம் | \| O O | 4 2 2 | 8 |
| திருச்ரம் | ஷெ | 3 2 2 | 7 |
| மிச்ரம் | ... | 7 2 2 | 11 |
| கண்டம் | .... | 5 2 2 | 9 |
| சங்கிர்ணம் | .... | 9 2 2 | 13 |

## 6. அட தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| ஜாதி | அடையாளம் | அட்சரம் | | | | ஆக எண் |
|---|---|---|---|---|---|---|
| சதுச்ரம் | \| \| O O | 4 | 4 | 2 | 2 | 12 |
| திருச்ரம் | ௸ | 3 | 3 | 2 | 2 | 10 |
| மிச்ரம் | ... | 7 | 7 | 2 | 2 | 18 |
| கண்டம் | ... | 5 | 5 | 2 | 2 | 14 |
| சங்கிர்ணம் | .... | 9 | 9 | 2 | 2 | 22 |

## 7. ஏக தாளங்கள் ஐந்துக்கு விபரம்.

| | | | |
|---|---|---|---|
| சதுச்ரம் | \| | 4 | 4 |
| திருச்ரம் | ௸ | 3 | 3 |
| மிச்ரம் | ... | 7 | 7 |
| கண்டம் | ... | 5 | 5 |
| சங்கீர்ணம் | ... | 9 | 9 |

## பயிற்சி ஆரம்பம்.

### சுருதி தெரிந்துகொள்ளும் விபரம்.

சுருதியென்பது முதலில் ஓர் சுரத்தினின்று உண்டாகும் நாதம். அதை ஷட்ஜமம்(ச)என்று கூறப்படும். இதை அறிந்து கொண்ட பிறகு மற்ற சுரங்களின் நாதம் இன்னதென்று அறியலாம். (உ-ம்) 2-வது பக்கத்தில் வரையப்பட்டிருக்கிற சுருதிபேதக்கட்டத்தின் விபரப்படி ஆர்மோனிய வாத்தியத்திலுள்ள மெட்டுகளில் எந்த மெட்டை எண் 1 (ச) ஆக வைத்துக்கொள்ளுகிறீர்களோ அதற்குஅடுத்தமெட்டு 2 சுத்த(ரி)யாகவும்,மெட்டு மூன்று (3) சது. (ரி) சுத்த, க வாகவும் முறையே கட்டத்திற் கண்டபடி வரும். எனவே (ச) என்ற சுரத்தின் நாதத்தை முதவில் நிதானித்துக்கொண்டுதான் பின் மற்ற ஸ்வரங்களின் நாதம் இன்னதென்று அறிந்துகொள்ளவேண்டும். இம்முறை தெரிந்து இந்நூலிலுள்ள விபரப்படி கற்றுக்கொள்ளும் விவேகமுடைய

நண்பர்களனைவரும் நம் பெரியார் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப்பண்முறை முதலிய திருப்பாடல்களைப்பாடி நம்தமிழ்நாட்டிற்குப்பெரும் பேற்றை விளைவிப்பதுடன் இம்மை மறுமைப்பயனையும் அடைவார்களென்பதற்கையமில்லை.

## சுரவழி
## மாயாமாளவகௌளை.

ச — சுத்த. ரி — அந்த. க — சுத்த. ம — ப சுத்த. த — கா. நி — ச

ஆரோகணமென்பது,ஏறுதல். அதாவது ச ரி க ம ப த நி ச

அவரோகணமென்பது இறங்குதல் ச நி த ப ம க ரி ச

## கால அளவின் விபரம்.

1-முதல் 4-வரையுள்ள பயிற்சிக்குரிய பாடங்களைத் தாளத்தின் கால அளவுடன் பயிற்சி செய்யும் முறை.

### முதற் காலம்.

ச □□□□□□□□ ரி □□□□□□□□ க □□□□□□□□ ம □□□□□□□□
ப □□□□□□□□ த □□□□□□□□ நி □□□□□□□□ ச □□□□□□□□
ச □□□□□□□□ நி □□□□□□□□ த □□□□□□□□ ப □□□□□□□□
ம □□□□□□□□ க □□□□□□□□ ரி □□□□□□□□ ச □□□□□□□□

### இரண்டாங் காலம்.

ச □□□ ரி □□□ க □□□ ம □□□ ப □□□
த □□□ நி □□□ ச □□□ ச □□□ நி □□□
த □□□ ப □□□ ம □□□ க □□□ ரி □□□
ச □□□

### மூன்றாங் காலம்.

ச □ ரி □ க □ ம □ ப □ த □ நி □ ச □
ச □ நி □ த □ ப □ ம □ க □ ரி □ ச □

---

குறிப்பு:— கால அளவுக்காக ஒவ்வொரு சுரத்திற்கும் இடப்பட்டிருக்கிற '□' இந்தச் சவுக்கப்புள்ளிகள் ஒவ்வொன்றும் ஒரு மாத்திரையின் அளவாவதால் ஒவ்வொரு சுரத்திற்கும் எத்தனை அடையாளங்களிடப்பட்டிருக்கின்றனவோ அத்தனை அடையாளங்களின் கார்வை (அளவு) நிற்கவேண்டும்;

# பயிற்சிக்குரிய பாடங்கள்.

## 1-ம் பாடம், சுரவழி.

---

1. சரிகம — பதநிச — சநிதப — மகரிச

2. சரிகம — சரிகம — சரிகம — பதநிச
சநிதப — சநிதப — சநிதப — மகரிச

3. சரிகம — சரிசரி — சரிகம — பதநிச
சநிதப — சநிசநி — சநிதப — மகரிச

4. சரிகம — பாபா — சரிகம — பதநிச
சநிதப — மாமா — சநிதப — மகரிச

5. சரிகம — பாசரி — சரிகம — பதநிச
சநிதப — மாசநி — சநிதப — மகரிச

6. சரிகம — பமகரி — சரிகம — பதநிச
சநிதப — மபதநி — சநிதப — மகரிச

7. சரிகம — பமதப — சரிகம — பதநிச
சநிதப — மபகம — சநிதப — மகரிச

8. சரிகம — ரிகமப — சரிகம — பதநிச
சநிதப — நிதபம — சநிதப — மகரிச

9. சரிகம — பாகம — பா□□ — பா□□
கமபத — நிதபம — கமபக — மகரிச

10. சாநித — நீதப — தாபம — பாபா
கமபத — நிதபம — கமபக — மகரிச

11. சரிகரி — காகம — பமபா — தபதா
மபதபு — தநிதப — மபதப — மகரிச

12. சரிகம — பாபா — ததபா — மமபா
தநிசா — சநிதப — சநிதப — மகரிச.

## 2-ம் பாடம் ஹெச்சுஸ்த்தாயி வரிசை.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | சரிகம | — | பதநிச | — | சா□□ | — | சா□□ |
| | தநிசரி | — | சநிதப | — | சநிதப | — | மகரிச |
| 2. | சரிகம | — | பதநிச | — | சா□□ | — | சா□□ |
| | தநிசரி | — | சசரிச | — | சரிசநி | — | தபமப |
| | தநிசரி | — | சநிதப | — | சநிதப | — | மகரிச |
| 3. | சரிகம | — | பதநிச | — | சா□□ | — | சா□□ |
| | தநிசரி | — | கரிசரி | — | சரிசநி | — | தபமப |
| | தநிசரி | — | சசரிச | — | சரிசநி | — | தபமப |
| | தநிசரி | — | சநிதப | — | சநிதப | — | மகரிச |
| 4. | சரிகம | — | பதநிச | — | சா□□ | — | சா□□ |
| | தநிசரி | — | கமகரி | — | சரிசநி | — | தபமப |
| | தநிசரி | — | கரிசரி | — | சரிசநி | — | தபமப |
| | தநிசரி | — | சசரிச | — | சரிசநி | — | தபமப |
| | தநிசரி | — | சநிதப | — | சநிதப | — | மகரிச |

## 3-ம் பாடம் ஜெண்ட வரிசை

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | சசரிரி | — | ககமம | — | பபதத | — | நிநிசச |
| | சசநிநி | — | ததபப | — | மமகக | — | ரிரிசச |
| 2. | சசரிரி | — | ககமம | — | ரிரிகக | — | மமபப |
| | ககமம | — | பபதத | — | மமபப | — | ததநிநி |
| | பபதத | — | நிநிசச | — | சசநிநி | — | ததபப |
| | நிநிதத | — | பபமம | — | ததபப | — | மமகக |
| | பபமம | — | ககரிரி | — | மமகக | — | ரிரிசச |
| 3. | சசரிரி | — | ககரிரி | — | சசரிரி | — | ககமம |
| | ரிரிகக | — | மமகக | — | ரிரிகக | — | மமபப |
| | ககமம | — | பபமம | — | ககமம | — | பபதத |
| | மமபப | — | ததபப | -- | மமபப | — | ததநிநி |
| | பபதத | — | நிநிதத | — | பபதத | — | நிநிசச |
| | சசநிநி | — | ததநிநி | — | சசநிநி | — | ததபப |

நிநிதத — பபதத — நிநிதத — பபமம
ததபப — மமபப — ததபப — மமகக
பபமம — ககமம — பபமம — ககரிரி
மமகக — ரிரிகக — மமகக — ரிரிசச

4. சாச — ரீரிகக — சசரிரி — ககமம
ரீரி — காகமம — ரிரிகக — மமபப
காக — மாமபப — ககமம — பபதத
மாம — பாபதத — மமபப — ததநிநி
பாப — தாதநிநி — பபதத — நிநிசச
சாச — நீநிதத — சசநிநி — ததபப
நீநி — தாதபப — நிநிதத — பபமம
தாத — பாபமம — ததபப — மமகக
பாப — மாமகக — பபமம — ககரிரி
மாம — காகரிரி — மமகக — ரிரிசச

5. சசா — ரிரீகக — சசரிரி — ககமம
ரிரீ — ககாமம — ரிரிகக — மமபப
ககா — மமாபப — ககமம — பபதத
மமா — பபாதத — மமபப — ததநிநி
பபா — ததாநிநி — பபதத — நிநிசச
சசா — நிநீதத — சசநிநி — ததபப
நிநீ — ததாபப — நிநிதத — பபமம
ததா — பபாமம — ததபப — மமகக
பபா — மமாகக — பபமம — ககரிரி
மமா — ககாரிரி — மமகக — ரிரிசச

6. சசச — ரிரிரிகக — சசரிரி — ககமம
ரிரிரி — கககமம — ரிரிகக — மமபப
ககக — மமமபப — ககமம — பபதத
மமம — பபபதத — மமபப — ததநிநி
பபப — தததநிநி — பபதத — நிநிசச
சசச — நிநிநிதத — சசநிநி — ததபப
நிநிநி — தததபப — நிநிதத — பபமம

ததத — பபபமம — ததபப — மமகக
பபப — மமமகக — பபமம — ககரிரி
மமம — கககரிரி — மமகக — ரிரிசச

7. சசரி — சசரிசரி — சசரிரி — ககமம
ரிரிக — ரிரிகரிக — ரிரிகக — மமபப
ககம — ககமகம — ககமம — பபதத
மமப — மமபமப — மமபப — தததிநி
பபத — பபதபத — பபதத — நிநிசச
சசநி — சசநிசநி — சசநிநி — ததபப
நிநித — நிநிதநித — நிநிதத — பபமம
ததப — ததபதப — ததபப — மமகக
பபம — பபமபம — பபமம — ககரிரி
மமக — மமகமக — மமகக — ரிரிசச

8. சசரிரிக — சரிக — சசரிரி — ககமம
ரிரிககம — ரிகம — ரிரிகக — மமபப
ககமமப — கமப — ககமம — பபதத
மமபபத — மபத — மமபப — ததநிநி
பபததநி — பதநி — பபதத — நிநிசச
சசநிநித — சநித — சசநிநி — ததபப
நிநிததப — நிதப — நிநிதத — பபமம
ததபபம — தபம — ததபப — மமகக
பபமமக — பமக — பபமம — ககரிரி
மமககரி — மகரி — மமகக — ரிரிசச

9. சாசச — ரீரிரி — காகக — மாமம
பாபப — தாதத — நீநிநி — சாசச
சாசச — நீநிநி — தாதத — பாபப
மாமம — காகக — ரீரிரி — சாசச

10. சாசச — ரீரிரி — காகக — மாமம
ரீரிரி — காகக — மாமம — பாபப
காகக — மாமம — பாபப — தாதத

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| மாமம | — | பாபப | — | தாதத | — | நீநிநி |
| பாபப | — | தாதத | — | நீநிநி | — | சாசச |
| சாசச | — | நீநிநி | — | தாதத | — | பாபப |
| நீநிநி | — | தாதத | — | பாபப | — | மாமம |
| தாதத | — | பாபப | — | மாமம | — | காகக |
| பாபப | — | மாமம | — | காகக | — | ரீரிரி |
| மாமம | — | காகக | — | ரீரிரி | — | சாசச |

11.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சசசச | — | ரிரிரிரி | — | கககக | — | மமமம |
| பபபப | — | தததத | — | நிநிநிநி | — | சசசச |
| சசசச | — | நிநிநிநி | — | தததத | — | பபபப |
| மமமம | — | கககக | — | ரிரிரிரி | — | சசசச |

12.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சசசச | — | ரிரிரிரி | — | கககக | — | மமமம |
| ரிரிரிரி | — | கககக | — | மமமம | — | பபபப |
| கககக | — | மமமம | — | பபபப | — | தததத |
| மமமம | — | பபபப | — | தததத | — | நிநிநிநி |
| பபபப | — | தததத | — | நிநிநிநி | — | சசசச |
| சசசச | — | நிநிநிநி | — | தததத | — | பபபப |
| நிநிநிநி | — | தததத | — | பபபப | — | மமமம |
| தததத | — | பபபப | — | மமமம | — | கககக |
| பபபப | — | மமமம | — | கககக | — | ரிரிரிரி |
| மமமம | — | கககக | — | ரிரிரிரி | — | சசசச |

## 4-ம் பாடம். அலங்காரம்.

### 1. சதுச்ரஜாதி, துருவ தாளம். (14) அட்சரங்கள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சரிகம | — | கரி | — | சரிகரி | — | சரிகம |
| ரிகமப | — | மக | — | ரிகமக | — | ரிகமப |

---

வழக்கத்தில் வழங்கிவருகிற அலங்காரம் தவிற புதிதாக, சில இராகங்களிலும் தாளங்களிலும் அலங்காரங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றனீ.

அவற்றிற்கு ஸ்தாயையின் அடையாளப்புள்ளிகள் கொடுக்கப் பட்டிருக்கிறது.

கமபத — பம — கமபம — கமபத
மபதநி — தப — மபதப — மபதநி
பதநிச — நித — பதநித — பதநிச
சநிதப — தநி — சநிதநி — சநிதப
நிதபம — பத — நிதபத — நிதபம
தபமக — மப — தபமப — தபமக
பமகரி — கம — பமகம — பமகரி
மகரிச — ரிக — மகரிக — மகரிச

2. சதுச்ரஜாதி, மட்டிய தாளம். (10) அட்சரங்கள்.

சரிகரி — சரி — சரிகம
ரிகமக — ரிக — ரிகமப
கமபம — கம — கமபத
மபதப — மப — மபதநி
பதநித — பத — பதநிச
சநிதநி — சநி — சநிதப
நிதபத — நித — நிதபம
தபமப — தப — தபமக
பமகம — பம — பமகரி
மகரிக — மக — மகரிச

3. சதுச்ரஜாதி, ரூபக தாளம். (6) அட்சரங்கள்.

சரி — சரிகம — ரிக — ரிகமப
கம — கமபத — மப — மபதநி
பத — பதநிச — சநி — சநிதப
நித — நிதபம — தப — தபமக
பம — பமகரி — மக — மகரிச

4. மிச்ரஜாதி, செம்பை தாளம். (10) அட்சரங்கள்.

சரிகசரிசரி — க — மா
ரிகமரிகரிக — ம — பா
கமபகமகம — ப — தா
மபதமபமப — த — நீ

பதநிபதபத — நி — சா
சநிதசநிசநி — த — பா
நிதபநிதநித — ப — மா
தபமதபதப — ம — கா
பமகபமபம — க — ரீ
மகரிமகமக — ரி — சா

5. திருச்ரஜாதி, திருபுடை தாளம். (7) அட்சரங்கள்.

சரிக — சரிகம — ரிகம — ரிகமப
கமப — கமபத — மபத — மபதநி
பதநி — பதநிச — சநித — சநிதப
நிதப — நிதபம — தபம — தபமக
பமக — பமகரி — மகரி — மகரிச

6 கண்ட ஜாதி, அட தாளம். (14) அட்சரங்கள்.

சரீகா — சாரிகா — மா — மா
ரிகாமா — ரீகமா — பா — பா
கமாபா — காமபா — தா — தா
மபாதா — மாபதா — நீ — நீ
பதாநீ — பாதநீ — சா — சா
சநீதா — சாநிதா — பா — பா
நிதாபா — நீதபா — மா — மா
தபாமா — தாபமா — கா — கா
பமாகா — பாமகா — ரீ — ரீ
மகாரீ — மாகரீ — சா — சா

7, சதுச்ரஜாதி, ஏக தாளம். (4) அட்சரங்கள்.

சரிகம — ரிகமப — கமபத — மபதநி — பதநிச
சநிதப — நிதபம — தபமக — பமகரி — மகரிச

8. திருச்ரஜாதி, ஏக தாளம். (3) அட்சரங்கள்.

சரிக — ரிகம — கமப — மபத — பதநி — தநிச
சநித — நிதப — தபம — பமக — மகரி — கரிச

சுத்த நாட.

ஆ. கா – சு. ம – கா. நி —

ஆ, ச க ம ப நி

ச க ம ப நி அவ.

9. திருச்ரஜாதி, துருவ தாளம். (11) அட்சரங்கள்.

சகச — சக — சகம — கமப

கமப — கம — கமப — மபநி

மபநி — மப — மபநி — பநிச்

பநிச் — பநி — பநிச் — நிச்க்

நிச்க் — நிச் — நிச்க் — ச்க்ம்

ம்க்ச் — ம்க் — ம்க்ச் — க்ச்நி

க்ச்நி — க்ச் — க்ச்நி — ச்நிப

ச்நிப — ச்நி — ச்நிப — நிபம

நிபம — நிப — நிபம — பமக

பமக — பம — பமக — மகசு

மோகனம்.

ச. ரி -- ஆ. கா -- ச த —

ஆ. ச ரி க ப த

ச ரி க ப த அவ.

10. மிச்ரஜாதி, துருவ தாளம். (23) அட்சரங்கள்.

சரிகபகரிப — கரி — சரிகபககரி — சரிகபகபக

ரிகபதபகத — பக — ரிகபதபபக — ரிகபதபதப

கபதச்தபச் — தப — கபதச்ததப — கபதச்தச்த

பதச்ரிச்தரி — ச்த — பதச்ரிச்ச்த — பதச்ரிச்ரிச்

தச்ரிக்ரிச்க் — ரிச் — தச்ரிக்ரிரிச் — தச்ரிக்ரிச்ரி

ரிச்தபதச்ப — தச் — ரிச்தபததச் — ரிச்தபதபத

ச்தபகபதக — பத — ச்தபகபபத — ச்தபகபகப

தபகரிகபரி — கப — தபகரிககப — தபகரிகரிக

பகரிசரிகச — ரிக — பகரிசரிரிக — பகரிசரிசரி

கரிசதசரித — சரி — கரிசதசசரி — கரிசதசரிச

### சுத்த சாவேரி.

ச. ரி -- சு ம -- ச. த —

ஆ. ச ரி ம ப த

ச ரி ம ப த அவ.

**11, திருச்ரஜாதி, மட்டிய தாளம். (8) அட்சரங்கள்.**

| | | | | |
|---|---|---|---|---|
| சரிம | — | ரிச | — | ரிமப |
| ரிமப | — | மரி | — | மபத |
| மபத | — | பம | — | பதச் |
| பதச் | — | தப | — | தச்ரி |
| தச்ரி | — | ச்த | — | ச்ரிம் |
| ம்ரிச் | — | ரிம் | — | ரிச்த |
| ரிச்த | — | ச்ரி | — | ச்தப |
| ச்தப | — | தச் | — | தபம |
| தபம | — | பத | — | பமரி |
| பமரி | — | மப | — | மரிச |

### மத்திமாவதி.

ச. ரி – சு. ம = கை. நி

ஆ. ச ரி ம ப நி

ச ரி ம ப நி அவ.

**12. கண்ட ஜாதி, மட்டிய தாளம்' (12) அட்சரங்கள்,**

| | | | | |
|---|---|---|---|---|
| சரிமரிச | — | ரிம | — | சரிமரிம |
| ரிமபமரி | — | மப | — | ரிமபமப |
| மபநிபம | — | பநி | — | மபநிபநி |
| பநிச்நிப | — | நிச் | — | பநிச்நிச் |
| நிச்ரிச்நி | — | ச்ரி | — | நிச்ரிச்ரி |
| ரிச்நிச்ரி | — | ச்நி | — | ரிச்நிச்நி |
| ச்நிபநிச் | — | நிப | — | ச்நிபநிப |
| நிபமபநி | — | பம | — | நிபமபம |
| பமரிமப | — | மரி | — | பமரிமரி |
| மரிசரிம | — | ரிச | — | மரிசரிச |

குந்தளவராளி.

சு. ம. – ச. ந – கை. நி—
ஆ. ச ம ப த நி த
ச ம ப த நி அவ.

13 சங்கீரணஜாதி மட்டியதாளம் (20) அட்சரங்கள்

சாமாபாதநித — பம — சாமாபாதநித
மாபாதாநிதநி — தப — மாபாதாநிதநி
பாதாநீதச்ம் — ச்நி — பாதாநீதச்ம்
ம்ாச்ாநீதபத — தச் — மாச்ாநீதபத
ச்ாநீதாபமப — நித — சாநீதாபமப
நீதாபாமசம — பத — நீதாபாமசம
தாபாமாசதச — மப — தாபாமாசதச

நாகஸ்வராளி.

அ. கா –– சு. ம – ச, த—
ஆ. ச க ம ப த
ச க ம ப த அவ.

14 திருச்ரஜாதி. ரூபகதாளம் (5) அட்சரங்கள்.

சத — சகம
கச — கமப
மக — மபத
பம — பதச்
தப — தச்க்
க்ம் — க்ச்த
ச்க் — ச்தப
த்ச — தபம
பத — பமக
மப — மகச

மந்தாரி.

சு. ரி –– அ. கா –– பி. ம –– கா. நி —
ஆ. ச ரி க ம ப நி
ச ரி க ம ப நி அவ.

15. மிச்ரஜாதி, ரூபக தாளம். (9) அட்சரங்கள்.

சரி — சரிகமபமக
ரிக — ரிகமபநிபம

கம — கமபநிச்நிப

மப — மபநிச்ரிச்நி

பநி — பநிச்ரிக்ரிச்

நிச் — நிச்ரிக்ம்க்ரி

ரிச் — ரிச்நிபமபநி

ச்நி — ச்நிபமகமப

நிப — நிபமகரிகம

பம — பமகரிசரிக

மக — மகரிசநிசரி

கரி — கரிசநிபநிச

வசந்த.

சு. ரி -- அ. கா -- சு. ம -- ச. த -- கா. நி. —

ஆ. ச க ம த நி

ச ரி க மா த நி அவ.

16. கண்டஜாதி ரூபகதாளம் (7) அட்சரங்கள்.

சக — கமததம

கம — மதநிநித

மத — தநிச்ச்நி

தநி — நிச்ரிரிச்

நிச் — ச்க்ம்க்

க்ரி — ரிச்நிநித

ரிச் — சநிததம

ச்நி — நிதமமக

நித — தமககரி

தம — மகரிரிச

பூபாலம்.

சு. ரி -- அ. க -- சு. த—

ஆ. ச ரி க ப த

ச ரி க ப த

17. கண்டஜாதி செம்பைதாளம் (8) அட்சரங்கள்.

சரிகபக — ரி — சா

ரிகபதப — க — ரீ

| | | | | |
|---|---|---|---|---|
| கபதச்த | — | ப | — | கா |
| பதச்ரிச் | — | த | — | பா |
| தச்ரிக்ரி | — | ச | — | தா |
| தபகரிக | — | ப | — | தா |
| பகரிசரி | — | க | — | பா |
| கரிசதச | — | ரி | — | கா |
| ரிசதபத | — | ச | — | ரீ |
| சதபபப | — | த | — | சா |

அம்சத்வனி.

ச. ரி -- அ. கா -- கா. நி—
ஆ. ச ரி க ப நி
ச ரி க ப நி அவ.

18. மிச்ரஜாதி திருபுடைதாளம் (11) அட்சரங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| சரிகபககரி | — | கப | — | கரி |
| ரிகபநிபபக | — | பநி | — | பக |
| கபநிச்நிநிப | — | நிச் | — | நிப |
| பநிச்ரிச்ச்நி | — | சரி | — | ச்நி |
| நிச்ரிக்ரிரிச் | — | ரிக | — | ரிச் |
| ச்நிபகபபநி | — | பக | — | பநி |
| நிபகரிககப | — | கரி | — | கப |
| பகரிசரிரிக | — | ரிச | — | ரிக |
| கரிசநிசசரி | — | சநி | — | சரி |
| ரிசநிபநிநிச | — | நிப | — | நிச |

ஸ்ரீரஞ்சனி.

ச. ரி -- சா. கா -- சு. ம -- ச. த -- கை. நி—
ஆ. ச ரி க ம த நி
ச ரி க ம த நி அவ.

19. மிச்ரஜாதி அடதாளம் (18) அட்சரங்கள்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சரீகமதம | — | சரீகமதம | — | கா | — | கா |
| ரிகாமதநித | — | ரிகாமதநித | — | மா | — | மா |

